வெளியீடு 105. 5000—டிசம்பர் '29.

ஜீவகாருண்ய சக்தி துணை. 2621

# ஜீவகாருண்ய கீதங்கள்.

சுவாமி சுத்தானந்த பாரதியார் இயற்றியவை.

---



## 1. அருள்தொண்டர் செல்லல்.

(ஜோர்ஜோர என்றமெட்டு)

### பல்லவி

செல்வோம், கொலை மறுக்க-செல்வோ மன்பரே!

### அநுபல்லவி

தொல்லுலகிற் படுகொலைகள்
சொல்லொணாது! சொல்லொணாது! (செல்)

### சரணம்

மனிதரை மனிதர் சுட்டு மாய்க்கின்றார்களே!
இனிப்பொறுக்க முடியாதையோ
இவ்வுலகிற் போர்வினைகள்! (செல்)

வாயில்லா வுயிர்களை வதைக்குங் கோரமோ!
ஆயவோ! உரைக்கப்போமோ!
அங்கமெல்லாம் பதறுதையோ! (செல்)

பூவெலாம் புனிதமுற்றுப் பொலிக சாந்தமே!
ஜீவகாருண்ய சக்தி யெங்கும்
திகழ மகிழ அகில மெல்லாம்! (செல்)

## 2. அண்ணமாரே !

("நந்தலாலா" என்ற மெட்டு)

கொலையும் புலையும் வேண்டாம்—அண்ணமாரே
பலியும் பாவமும் வேண்டாம் ,,
ஆண்டவ னொருவ னன்றோ, ,,
அன்பும் அருளுமன்றோ ! ,,
எள்ளுக்குள் எண்ணெயென ,,
எங்கு மிருப்பவனே ,,
ஆட்டினுங் கோழியினும் ,,
ஆருயிராய் நிற்பவனே ,,
யாரை வருத்திடினும் ,,
அவனை வருத்துவதாம் ,,
வாயில்லாச் சீவனையே ,,
வதைத்துண்ணுஞ் செயல் நன்றோ ,,
துன்பம் பிறர்க் கிழைத்தே ,,
தொந்தி வளர்த்தல் நன்றோ ,,
இரக்கம் மனிதர் குணம் ,,
இரக்கமற்ற பாவிகளோ ! ,,
மரக்கறி தானியமே ,,
மனிதர் புசிப்பதுவே ,,
நாற்றப் பிணத்தை யுண்ணல் ,,
நன்றோ மனிதருக்கே ,,
ஊத்தையுடலை யுண்டே ,,
உம்மை வளர்த்தென்பயன் ? ,,
ஆடும்மை யிறத்திடின் ,,
ஆஆ வென் றேயழுவீர் ,,

ஆட்டைநீ ரறுக்கும்போ தண்ணமாரே அண்ணமாரே
அவ்வுணர்வை யேனுணரீர் ,,
கோழியும்மை வெட்டிடினே ,,
கூகூவென் றேயழுவீர் ,,
கோழியைநீ ரறுக்கும்போ தண்ணமாரே ,,
குற்றத்தை யேனுணரீர் ,,
பாவம் பழியல்லவோ ,,
பதைபதைக்கக் கொலைபுரிதல் ,,
நோவுந் துயர் பிணியும் ,,
நும்முடலை வாட்டிடுமே ,,
அன்பு வடிவ மன்றோ ,,
ஆண்டவன் சக்தி யெல்லாம் ,,
துன்பப் படைப்புகளுக் கண்ணமாரே! ,,
துன்பமே தந்திடுவாள். ,,(கொலை)

## 3. (பலி கொடுக்காதே.)

(ஆண்டிப்பண்டாரம் என்ற மெட்டு)

### பல்லவி.

பலி கொடுக்காதே—அப்பா
கொலை புரியாதே.

### அனுபல்லவி.

ஆடு பலிகொடுத்தால்,
அத்தனையும் பாவமடா
கேடு விளையுமடா
கெட்ட பழக்க மடா (பலி)

**சரணம்.**

பாவங்கொலை யல்லவோ,
படுநரக வழி யல்லவோ,
நோவு விளைத்திடலே
நூறு நர கல்லவோ? (பலி)

சக்தியன்னை மைந்தரடா
தங்கும் உயிர்க ளெல்லாம்,
குத்திக் கொலை புரிந்தால்
கோபங் கொதிப்பளடா. (பலி)

பஞ்சா வமிருதமும்
பழந்தேங்காய்ப் பாலமுதும்
நெஞ்சன்புடன் படைத்தால்,
நினைத்தபல னருகுமடா (பலி)

## 4. அன்னை அலறுதல்.

(நொண்டிச்சிந்து.)

யாரிங்கு பலியிடுதல்—பாழும்
அறிவிலிகாளது படுகொலையே! (யாரி)
உயிர்களி னன்னை யாடா—எனக்கு
உயிர்க்கொலை தருவது பாவமடா (யா)
இரக்கமென் னிதயமடா—இந்த
இரத்த—லிகண் டுள்ளம் பதைக்குதடா! (யா)
வதைத்திடல் பாவமடா—நரக
வாயி லுனைததிறந்து விழுங்குமடா! (யா)

எவ்வுயிர்க்கும் முயிராய்—எங்கும்
இருப்பவள் என் மனம் பதைக்குதடா (யா)
தாய்மனந் துடிக்குதடா—ஐயையோ!
தாங்கிலேன்! சேய்களின் தலையறுத்தல், (யா)
என்குடல் நடுநடுங்க—மனிதீர்
என்குல மைந்தரை ஏனறுப்பீர்! (யா)
வாயில்லாப் பிள்ளைகளே—ஐயையோ
வதைத்திடல் வாழ்வுமக் காகிடுமோ (யா)
ஊமையோர் தம்பியென்றால்—அவனை
உரித்துண்ணத் துணிவீரோ கருத்துடனே! (யா)
எமனுக்குப் பயப்படுதீர்—நீரே
எமன்பிற வுயிர்களுக் காகுவீரே? (யா)
வயிறென்ன சுடுகாடோ—உங்கள்
மனமென்ன புலிகளின் புதர் வீடோ? (யா)
இன்னமு மறிவிலையோ—ஐயையோ
என்பெயர் சொல்லியோ கொலைபுரிவீர்! (யா)
நில்லுங்கள் மனிதர்களா!—இனி
நீருய்யக் கருதிடின் சீருடனே, (யா)
பாற்பொங்கல் பழந்தேங்காய்—மனப்
பத்தியிற் படைத்திடின் பலனளிப்பேன். (யா)
உயிர்களைக் காத்திடினே—மனிதீர்
உங்குலம் வாழ்ந்திடும் உறுதியிதே (யா)
உயிர்களை மாய்த்திடினோ—உடனே
உங்குலம் நசித்திடு முணர்ந்திடுவீர்! (யா)
வாழுங்கள் கொலை விடுத்தே—உம்மை
வாயார வாழ்த்துவேன் மாந்தர்களா! (யாரிங்கு)

## 5. படு கொலை !

(பலி கொடுக்கும்போது ஆடுகள் அலறுவது)

(தெம்மாங்கு மெட்டு.)

படுகொலையோ ! படுகொலையோ !
பாதக மாந்தர்களா !
விடுதலையோ ! விடுதலையோ !
வீரமாக் காளியன்னை !

மனிதர்களோ ! மாதர்களோ !
மனதி லிரக்க மிலீர் !
சனியர்களாய் வந்தெமை நீர்
சதையுண்ணுஞ் சங்கடமேன் ?

இரக்க மற்ற பாவிகளா
எனெம்மைக் கொல்லுகிறீர் !
கருக்கறிவாள் உமையறுத்தால்,
கதறுவதைக் காணிலிரோ !

தானியங்கள் தாமிலையோ,
சாலவும்மைப் பேணுதற்கே ?
ஊனருந்தும் பாவிகளா !
உலகில் நீர் பேய்க்குலமோ ?

பாவமொன்றும் நாமறியோம்
பசிகளஞ் செய்கலன்னேம் !
பாவிகளா எங்களை யேன்
பதைக்கக் கொலை புரிவீர் ?

ஆண்டவனே என்படைத்தாய்
ஆருயிர் துடிக்குதையோ !
மாண்டிடவே மாந்தர் கையில்
வாழ்வை வழங்கினையோ !

## 6. தீமை வேண்டாம் !

(“ஆறுமுகமானவடி வேலா பாலா” என்ற மெட்டு)

பஞ்சமா பாதகங்கள் வேண்டாம், வேண்டாம் !
பதைக்கக் கொலைபுரிய வேண்டாம், வேண்டாம் !
வஞ்சகமும் பொய்களவும் வேண்டாம், வேண்டாம் !
மற்றுயிரைக் கொன்றருந்த வேண்டாம், வேண்டாம் !
(பஞ்ச)

புகையிலையும், பொடி, சுருட்டும் வேண்டாம், வேண்டாம் !
போதைதருங் கட்குடியும் வேண்டாம், வேண்டாம் !
நகைவலையில் மதிமயங்க வேண்டாம், வேண்டாம் !
நாரியரின் பொய்முயக்கும் வேண்டாம், வேண்டாம் !
(பஞ்ச)

பேராசை யழுக்காறும் வேண்டாம், வேண்டாம் !
பிறர்க்கென்றுந் தீமைசெய்ய வேண்டாம், வேண்டாம் !
போர்புரியும் மாயைகளும் வேண்டாம், வேண்டாம் !
பொன்னாசைப் பாவமெல்லாம் வேண்டாம்,
வேண்டாம் ! (பஞ்ச)

பெரியோரை நிந்தைசெய்ய வேண்டாம், வேண்டாம் !
பெற்றோரை மனவருத்த வேண்டாம், வேண்டாம் !
வறியோரைக் கொடுமைசெய்ய வேண்டாம், வேண்டாம் !
வாயில்லாச் சீவவதை வேண்டாம், வேண்டாம் !
(பஞ்ச)

## 7. வாழ்த்து.

ஜீவகாருண்யம்—வாழ்க
ஜினேந்திரனே !
பூவெலாமருள் பொலிக !
புத்தன் வாழ்கவே ! (ஜீவ)

ஈவிரக்கமே—வாழ்க
ஏசு நாதனே !
மேவியன் புயிர் தழைக்க
வீரர் வாழ்கவே ! (ஜீவ)

தர்மம் வாழ்கவே !—தர்ம
தாலர் வாழ்கவே !
கர்மயோக சக்தி வாழ்க !
கருணை வாழ்கவே ! (ஜீவ)

சுத்தன் வாழ்கவே—சுத்த
தர்மம் வாழ்கவே !
சுத்தசங்கம் பூவெலாந்
துலங்கி வாழ்கவே. (ஜீவ)

ஜீவ சக்தியே !—வாழ்க
சித்த சுத்தியே !
ஜீவ ரட்ச ணச்சபை
சிறந்து வாழ்கவே ! (ஜீவ)

---

திருவாளர் T. S. ஸ்ரீபால் அவர்களாலியற்றியவை.

# 1. மிகவும் மேன்மையானது எது?

ராகம் புன்னாகவராளி.

(1) நாட்டிலே மிக மேன்மை
யாதென்றுதேடி—ஓடி
நானலைந்தே னெங்குமொரு
பித்தன் போலாடி
கேட்டே நீதிஸ்தலங்க
ளெங்குநின்றேன்—அங்கு
கிளத்தினார் சட்டத்தையே
விட்டுச்சென்றேன். (நா)

(2) ஓதுங்கல்விச்சாலைகளில்
நம்பி நுழைந்தேன்—அங்கு
உரைத்தார் புத்திக்கூர்மையே
ஓதுங்கிவந்தேன்
தீதுதீரறிவுடை
யாரிடங் கேட்டேன்—அவர்
தீரமாய் சத்திய மென்றார்
திரும்பிவிட்டேன் (நா)

(3) அறிவிலா னெதிர்பட்டான்
குறை அறைந்தேன்—அவன்
ஆடிக் களியாட்ட மென்றான்
மனமுறிந்தேன்
சிறந்த பேரழகிளம்
மாதைக்கண்டேன்—புன்
சிரிப்புடன் காதல் என்றாள்
வெட்கமுண்டேன். (நா)

(4) ஆண்மையாகச் செல்லுமொரு
காளையைப்பார்த்தேன்—அவன்
அழகு அழகு என்றான்
அங்கம் வியர்த்தேன்
தூண்போல் தோளுடை படை
வீரனை விண்டேன்—அவன்
துணிவாகக் கீர்த்தி யென்றான்
துன்பங் கொண்டேன். (நா)

(5) தேசாபிமானிகளை
விண்ணப்பித்தேன்—அவர்
தேர்ந்த சுதந்தர மென்றார்
மிகநகைத்தேன்
தாசனைச்சென்று ஞானி
காலில் விழுந்தேன்—மிக
தாமதித்து நீதி யென்றார்
மனங்குழைந்தேன். (நா)

(6) முனிவர் பெருமானை
வணங்கி நின்றேன்—அவர்
முக்தி யென்றுரைக்க
முகம்வாடிச் சென்றேன்.
இனி பதிலுரைப்பவ
ரிங்கில்லை யென்றே—என்
இருதயம் வருத்தமா
யுரைத்ததன்றே. (நா)

(7) ஒன்றுந் தோன்றாது
உலோரந்தனிலே—வாடி
உண்மையைச் சிந்தித்
திருக்கும் வேளையினிலே

என்று மிலானந்தத்துட
னுள்ளத்தினின்றே—சப்தம்
எழுந்தது அன்பு அன்பு
அன்பு தானென்றே. (நா)

(8) எழுந்தேன் தொழுதேன்மிக
துள்ளி குதித்தேன்—அன்பு
என்றெழுதி தெய்வமென
வாழ்த்தித் துதித்தேன்
பொழிந்தே னானந்த கண்ணீ
ரெனை மறந்தே—அன்பால்
போற்றுங்களேவ்வுயிரையும்
மேன்மை யறிந்தே. (நா)

---

## 2. ஆடுகள் முறையீடு.

ஊமைப் பிராணிகளாகிய எங்களைக் கத்தியினின்றுங் காப்பாற்றுங்கள்.

ஹரிகாம்போதி ஜன்யம் ராகம்.
ஸைந்தவி—தஸ்ர சாப்பு தாளம்.
கரும்பு தோட்டத்திலே என்ற மெட்டு.

பல்லவி.

கத்தியினின்றுங் காப்பீர்—ஆ
கத்தியினின்றுங் காப்பீர்

சரணம்.

(1) கத்தியினின்றுங்காப்பீர்—எங்கள்
கால்களுந்தலைகளும் அற்றுவிழும்படி

வெட்டிமடிப்போரே—நீர்
விழையும்வாழ் நாட்களின்வழியின் தொடர்ச்சியில்
சற்றே நின்றுபாரும்—கொலை
சரியாகுமா தெய்வசம்மதமா வென்று
சித்தந்தனில் தேரும்—துயரைச்
செப்பமுடியாத ஊமைப் பிராணிகளை
(கத்தியினின்றுங் காப்பீர்)

(2) இரக்கமென்பதிலையோ—ஆன்மா
ஏங்கித்திகைத்துத் துடித்து விம்முந்துயர்
உருக்குமெம் கண்களிலே—காணும்
உயிர்ப்புடன் படபடவெனப் பந்தடித்திடும்
இருதயசப்தங் கேளீர்—ஐயோ
இரக்க மின்னதெனவறியீரோ உங்களை
திருப்புதல் வீண்தானோ—யாங்கள்
திக்கற்றகைதிகளென்று விடுவித்து
(கத்தியினின்றுங் காப்பீர்)

(3) மேகக்கூட்டஞ்சூழும்—தளிர்
மேவு மரங்களின் குளிர்ந்த நிழலினும்
வேகப்பசிதீர்க்கும்—புல்
வெளிகளினும் பனிசூழ்ந்த மலையினும்
ஆகாஎல்லையற்றே—பெரும்
ஆழிபோலும் வேகக்காற்றைப்போலெங்குமே
சோகமின்றித்திரிவோம்—இந்தச்
சுயேச்சையாய் ஜென்மபூமியில் வாழ்மை
(கத்தியினின்றுங் காப்பீர்)

(4) மக்களெனும் பெரியீர்—பெரும்
மாண்புமிக்கபுண்ய ஜென்மபூமி நின்றும்
சொக்கும்படி பிரித்தே—எங்கள்
சுதந்தரச்சிறகினை முறித்துக்கால் களிலே
தக்க விலங்கிட்டீர்—இந்தத்
தகாதன செய்யுமுங்கள் மனதிலே
துக்க முகத்தாலே—யாங்கள்
சோர்ந்து வேண்டுங்குறி கவனித்தீர்களில்லை
(கத்தியினின்றுங் காப்பீர்)

(5) அடிமைத்தனம் பூண்டே—உங்கள்
ஆக்கினைக்கடங்கினோ மெவருக்குமே யொரு
கொடுமை நினைத்தறியோம்—பச்சைக்
கொடிகளுந் தழைகளுமேய்ந்து பாலுமக்குப்
படிமைபோல் நின்றளிப்போம்—எங்கள்
பரோபகாரத்தைச் சற்று நினையாது
கடுமையாய் வெட்டுகின்றீர்—இது
கலிகாலக்கூத்தோ தலையினெழுத்தோ
(கத்தியினின்றுங் காப்பீர்)

(6) ஆண்டவன் முன்னாலே—உங்கள்
அன்பும் அருளும் அளிக்கவேகேட்டிலோம்
வேண்டிநின்றோம் நியாயமே—இதனை
வீணென்று தாசினஞ்செய்து விட்டோடாதீர்
தூண்டும் மனசாட்சியே—ஐயா
துன்பமெவர்க்கு மொன்றெண்ணு தெம்முயிரை
ஆண்டுவாரீர் துரும்பாய்—ஏழை
அழுதுவிடுங்கண்ணீர் மண்ணிற்கலக்குமோ ?
(கத்தியினின்றுங் காப்பீர்)

2621



(7) வாரும் மஹாவீரரே—புவியில்
வாயில்லா பிராணிகள் மாயுது மனிதரால்
சேரும் மஹான் புத்தரே—புலால்
செறிந்த வயிற்றினரானர் மாந்தர்பலர்
பாருந்தாயுமானரே—அந்தோ
பாழுஞ் சிறுதெய்வங்கள் கோயில்முன்னுயிர் பலி
ஒரும் (இ) ராமலிங்கரே—நீங்கள்
உலகினிற்தோன்றி கொல்லாமை போதித்தெமை
(கத்தியினின்றுங் காப்பீர்)

## 3. தெய்வ அசரீரி.

(வந்தேமாதரம் வந்தேமாதரம்—என்ற மெட்டு)

பல்லவி.

அஞ்சேல் ஆடுகாள்! அஞ்சேல் ஆடுகாள்!
இன்றே காத்திடுவோம்

சரணம்.

தஞ்சமென்றே தலை தாழ்ந்து பணிந்தழும்
தன்மையினைக் கண்டே—மாந்தர்
நஞ்சின் கொடியராய்க் கொல்லுகின்றாரும்மை
நாணந்தன்னை மீண்டே—துயர்
மிஞ்சினு மானிடர் வெட்கமுறும்படி
மிக்க சாந்தம் பூண்டே—பெரும்
வஞ்சனைக்கநூர்க்கு வாய்மை யுரைக்கின்றீர்
வண்மையறங்கொண்டே—இனி
(அஞ்சேல் ஆடுகாள்)

மன்னுயிர் யாவும் மகிழ்ந்து குலாவிட
மண்ணுலகம் பொதுவே—அரும்
பொன்னுடல் படைத்த மானிடராயினும்
புழுவிற் குரியதுவே—உயிர்
முன்னமாற்றிய வினைப்படி ஆயுளை
முடிக்க யெமன் பொதுவே—இவன்
அன்றி வேறெருவருங்களைக் கொன்றிடி
லழிவாருண்மையிதுவே—இனி
(அஞ்சேல் ஆடுகாள்)

ஊமைக் குழந்தைகளாயினு முங்களை
உதாசினஞ் செய்யவில்லை—மாந்தர்
தீமைப் புரியும்போதழுது விம்முங்குரல்
செவிதனிற் கேளாதில்லை—இதோ
தாமதமின்றிப் பிறந்துத் தரையினிற்
தடுப்போமுங்கள் தொல்லை—உயிர்கள்
க்ஷேமமுற்று வாழும் வாழ்க்கையே யெங்கள்
க்ஷேமமே வேறில்லை—இனி
(அஞ்சேல் ஆடுகாள்)

## 4. மிருகங்கள் மனிதர்களை விணுவுதல்.

### ஆனந்தகளிப்பு.

(தாயின் மணிக்கொடி பாரீர்—என்ற மெட்டு)

பல்லவி.

இறைச்சியைத் தின்போரே வாரும்—உமக்கு
எவ்வகையில் தாழ்ந்தோமென்பதைக் கூறும்

சரணம்.

1. எந்தவுயிர்களு மொன்றே—அதில்
ஏற்றந் தாழ்வென்றொரு வேற்றுமையுண்டோ
முந்திசெய்பாவ புண்ணியம்—உயிர்
மூடிக்கொண்ட வுடலாலேதான் பேதம் (இ)

2. அறிவில் குறைந்தவரன்றி—மற்ற
அச்சம் ஆகாரம் இணைதலினோடே
உறக்கத்தி லும்மில் குறைவோ—பகுத்
துணர்விலா மானிடரெம்மிலுயர்வோ (இ)

3. தாய்தந்தை தனயர்கள்கூடி—யாங்கள்
தாவிக்குதித் தணைத்தாடுவோம் ஓடி
காய்கனி தழைகொண்டு சேய்க்குத்—தாயார்
கடித்தூட்டு மன்புள்ள காட்சியைக் காண்பீர் (இ)

4. பொறுப்புடை நட்பினைப் பூண்போம்—இந்தப்
புவியிலெவரும் நிகராகாரன்றோ
விருப்ப மின்னதெனலாமோ—நாங்கள்
விலகித் தனியானல் விசனத்திற்களவோ (இ)

5. பிறவிக்குருடாய்ப் பிறந்தோன்—விழி
பெற்றாலென மகிழ்வோமுங்கள் சினேகம்
அறியோ முங்கள்வஞ்ச நெஞ்சம்—யாங்கள்
யாரையும் நம்பிவிடுவோமன்பாலே (இ)

6. ஆபத்தின்னதென் றறிவோம்—மெள்ள
அதினின்று நீங்கும் வழியை முயல்வோம்
கோபத்தன லெமக்குண்டு—அதைக்
கொள்ளோ முமைப்போ லெம்மேலாரிடமே. (இ)

7. பேசத் தெரியாதாரென்று—எம்மைப்
பிரித்துப்பேசாதீ ரெம்பாஷைதான் வேறு
நேசமாய் பேசுங்காலத்தே—யாங்கள்
நேர்மையாய் முகத்துடன்முகம் வைத்துரைப்
போம் (இ)

8. துஷ்டர்தமைக் கண்டபோது—வெகு
தூரத்தினின்று உரத்துக் கத்துவோம்
கஷ்டங்க ளுண்டானபோது—அதைக்
காட்ட உங்களைப்போல் கண்ணீருமுண்டு (இ)

9. என்ன! ஏன்? என்றதைத்தேற—எங்கள்
இனிய மனம் எண்ணிப் பார்க்கும் மனிதீர்
இன்னிசைக் கீதங்கள் கேழ்க்க—யாங்கள்
எங்கிருந்தாலு மோடோடி வருவோம் (இ)

10. மாலை மஞ்சள் வெய்யிலொளியும்—வரும்
மாயிருள் போக்குஞ் சந்திரனொளியும்
கோல நட்சத்திர ஒளியும்—காணில்
கொண்டாட்டத்திற் களவுண்டோ மனிதீர் (இ)

11. பசுங்கிளி பூட்டித் தேரேறி—அனங்கன்
பாரின் வரவினை தென்றலுரைக்க
பசுந்தளிர்விட்டு மரங்கள்—பூத்துப்
பரிந்து வரவேற்பபோ லசைந்தாடும். (இ)

12. வசந்தகாலம் வந்தபோதே—யாங்கள்
வாழ்த்தி வணங்கிக் குதித்தாடுவோமே
இசைகொள் வண்டினங்கள் சூழும்—மலர்
விரியுமணததிற் கெம்மனமும் விரும்பும். (இ)

13. வாடிக்கையாக நம்பின்னே—தினம்
வருவோம் சிறுவர்போல் பழக்கிடிலின்னே
வேடிக்கையாட்டங்கள் கற்று—வெகு
விந்தையதாக விளையாடுவோமே (இ)

14. எங்களைக் கொன்றிடவெண்ணி—நீங்கள்
எவ்வாறு வாளெடுக்கின்றீரோ நண்ணி
பங்காளியாகவே வந்து—உம்மைப்
பாகங்கொடுவென்று கேட்டோமாநொந்து (இ)

15. இரக்க மன்புமிலாமுகம்—வெறும்
இரும்புக் குண்டிலேழு துவாரங்களன்றோ
உருச்குதெங்கள் மனமையோ—நாளை
உமக்குவருந் துன்பமெண்ணும்போ தெல்லாம். (இ)

16. கொலைப் பிசாசும்மையாட்டி—நாளை
கொண்டுபோகும் நரகவேந்தன் முன்னாலே
தொல்லைப் பிசாசிதுவென்றே—அவர்
தருவார் வெகுமதி முதலாவதொன்றே (இ)

17. அந்தப் பாழ்நரகத்தே நின்று—இந்த
அவனியி லிவர்களைப் பிடிப்பதுபோன்றே
எந்த மாந்தரையும் முடியா—தென்று
ஈனஞ் செய்யுங் கொலைப் பிசாசந்தோ (இ)

18. நல்லறங்கொண்டு வாழ்வோரே—புவியில்
நல்லுலகடைபவரென் றறிந்தின்றே
கொல்லாவிரதங் கைக்கொண்டு—இந்த
குவலயத்தில் புகழ்பூண்டு வாழ்வீரே. (இ)

———

# கொலையுண்ட மிருகங்களின் அசரீரி.

## மாமிஸக்கடையில் நடக்கும் கோரஹிம்ஸைகள்.

### நொண்டிச்சிந்து.

1. மனிதர்களே கேளீர்—இழி
மாமிஸம் புசிக்க நீர் மனங்கொள்ளவே
சனியன் பிடித்ததெமையே—அந்தோ
சண்டாளப் பிரமனெம்மை யேனோ படைத்தான்
பனிக்குதுரைக்க நெஞ்சமே—நீங்கள்
பணங்கொடுத் தெம்முடலாம் பிணம் வாங்கியே
இனிதாகச் செல்லுகின்றீர்—யாங்கள்
இங்கனமடைந்த பெருமிம்ஸையைச் சற்றே (மனி)

2. கடுங்கொலை பல புரிந்தே—நெஞ்சம்
கல்லினுங் கனத்ததாலப் பாழுங்கொலைஞர்
கொடுமைவாள் கையிலேந்தி—யாங்கள்
கொஞ்சிவரும் வாழ்நாளின் குறுக்கேநின்று
திடுக்கிடப் பிடித்திடுவார்—வேறு
செய்வதறியாதெங்க ளினம் நினைத்தே
நடுங்கி உடலஞ்சிலிர்த்தே—நிற்க
நமன் தூதர்போல் நால்வர் சேர்ந்திழுப்பார் (மனி)

3. உயிரின்மே லுளவிருப்பால்—அவர்கள்
உரமுடை தோளின்தன்மை யோசாதிழுப்போம்
வயிற்றினைச் சேர்த்தணைப்பார்—மேலும்
வலிவுடனிழுத்துக் காலுதைத்துக் கொண்டே

அயர்ந்து போம்வரை முயல்வோம்—பின்னே
அடைக்கல மாவோமென்று தலைநிமிர்ந்தே
பயமுடை கண்களாலே—யாங்கள்
பார்க்கும் பரிதாபத்தைப் பாராதிகழ்ந்தே (மனி)

4. இழுத்தெமை முன்னேநிறுத்தி—யாங்கள்
இரைந்து அலறும் பெருமூச்சினிடையும்
அழுத்திப் பிடிக்கும் வலியின்—இடையும்
ஆயுள் பிரிவெண்ணிவிடுங் கண்ணீரிடையும்
புழுங்கிக் கதருமிடையும்—அங்கோ
புலையும் ரத்தமுந் தோய்ந்த கத்தியாலோங்கி
கழுத்தினிடையே வெட்டுவார்—துண்டாய்
கழுத்து முடலும்வேறாய் துடித்திடுமே (மனி)

5. கோரமினியும் வேண்டுமோ—ஐயா
கூறினேஞ் சுருக்கமாய்க் கொண்டதனேகம்
பாரினிற் கொலையுண்டு—யாங்கள்
பாவிகள் நிலைகண்டபின் பிறப்புவேண்டி.
ஊருரா புருவமின்றே—சுற்றி
ஓடினேங் கடையினிலாழ் நரகத்திலே
கூரிய விரும்பைக்காய்ச்சி—எம்மைக்
கொன்றவரைப் பேய்கள் பல குத்தக்கண்டோம்
(மனி)

6. அங்க முருகுதையா—எங்கள்
ஆருயிருங்கள் காத்தடைந்துளதால்
பொங்குறும் புலால் விடுவீர்—இலையேல்
புறப்படு மொருநாளை நீதிதெய்வமே

பொங்கி செண்டமாருதம்போல்—ஓறி
போற்றுமுங்க ளாத்துமன்மேல் புகுந்தடித்தே
சங்கடங்கள் பல பண்ணும்—இது
சத்தியம் சத்தியம் சொன்னேம் சத்தியமே (மனி)

## புலாலின் கொடுமை.

(என் வரமாட்டீர் என்ற மேட்டு)

பல்லவி.

என் விடமாட்டீரையா பாழும் புலாலை (எ)

சரணம்.

ஈனத்தையுண்டாக்கும். ஈரலைக்கெடுக்கும்
இனிய ஜீரணக்கருவிக் கின்னலைக் கொடுக்கும் (எ)
பந்தியில் வாராது பண்பினைத்தாராது
பாழுமூதேவி மூடும் பங்கயத் திருசேராது (எ)
தொட்டகையும் நாறும் * துவைத்த சட்டியும் நாறும்
தொடரும் பல நோய்களும் துன்மார்க்கச் செய்கை
அன்பை அழித்திடும் அருளை ஒழித்திடும் [சேரும் (எ)
அறிவை மந்தமாக்கி ஆயுளைக் குறைத்திடும் (எ)
இந்துமதங் கெடுமே இறைவனறம் படுமே
இனி வரும் பிறவியிலிருள் நரகத்திடுமே. (எ)
கொல்லா விரதமொன்றே கொண்டாரைச் சேரும் நன்றே
கோடியுயிர்கள் வாழ்த்தும் கோமானருளுமின்றே (எ)

---

* நாறும் என்பது இவ்விடத்தில் துர்நாற்றத்தைக் குறிக்கும்.

# யாகப்பாட்டு.

"நந்தலாலா" என்ற மெட்டு.

ஆட்டின் கொட்டைப் பிசைந்து—அய்யர்மாரே
அநியாயக் கொலைபுரியும்—அய்யர்மாரே
நாட்டிலுள்ளார் நகைக்க—அய்யர்மாரே
நாற்றப் புலாலுண்ணுதீர்—அய்யர்மாரே

வேதம் பிரமாண மென்றே—அய்யர்மாரே
வேள்வியி லாட்டைக் கொன்றீர்—அய்யர்மாரே
பாதக மைந்தில் முதலாம்—அய்யர்மாரே
படுகொலையைப் போற்றும் வேதம்—வேதமாமோ

உயிரைக் கொல்லும் யாவர்க்கு—மய்யர்மாரே
உயர்ந்த சுவர்க்கமெனிலோ—அய்யர்மாரே
உயிரை ரட்சிப்பவர்க்கு—அய்யர்மாரே
உண்டோ நரகங் கூறும்—அய்யர்மாரே

பிணத்தருகே சென்றிடிலோ—அய்யர்மாரே
பெருமுழுக்குப் போடுகின்றீர்—அய்யர்மாரே
பிணத்தை யாகத்திலிட்டு—அய்யர்மாரே
பிடுங்கித்தின்பதென் னுசாரம்—அய்யர்மாரே

பறையரைப் பார்த்திடிலோ—அய்யர்மாரே
பறக்கின்றீர் காததூரம்—அய்யர்மாரே
பறையன் செத்ததைத் தின்பான்—அய்யர்மாரே
பதைக்கக்கொன்று தின்கின்றீர்—அய்யர்மாரே

புலையனினுங் கீழானீரே—அய்யர்மாரே
பொய்மொழி வேதத்தினாலே—அய்யர்மாரே
குலங்கெடச் செய்வேதம்—அய்யர்மாரே
கொளுத்திவிடும் யாகத்தியில்—அய்யர்மாரே

பெரிய குலத்தாரொன்று—அய்யர்மாரே
பெருவேஷம் போட்டுவந்தீர்—அய்யர்மாரே
சிறியவினத்தார் செய்கை—அய்யர்மாரே
செய்யவேஷம் வெளியாச்சுதே—அய்யர்மாரே

மறுமையில் சுவர்க்கமென்றே—அய்யர்மாரே
மனங்கல்லா யாட்டைக்கொன்றீர்—அய்யர்மாரே
பெருமை யிழந்திரிப்போ—அய்யர்மாரே
பின்னையும் வருமிழிவே—அய்யர்மாரே

இரக்கஞ் சற்றுமிலாத—அய்யர்மாரே
ஏகுவீர் நரகங்கூண்டோடு—அய்யர்மாரே
அரக்கர் செய்கையைவிட்டு—அய்யர்மாரே
அஹிம்சா தர்மங்கொள்வீர்—அய்யர்மாரே

---

### கோருங்கள் கோருங்கள் என்றமெட்டு.

#### பல்லவி.

வேண்டாதீர் வேண்டாதீர் வேண்டாதிரே—புலால்
தீண்டாதீர் தீண்டாதீர் தீண்டாதீரே

#### அனுபல்லவி.

வேற்றுயிரின் கூற்றமாவீர்
ஆற்றுணுத் துர் நாற்றமேவீர் (வே)

#### சரணம்.

ஆண்டவனடியைப் பூண்டிடவேண்டி
ஆத்துமன்வந்த திம்மானிடமீண்டி

தூண்டுஞ் சிந்தைதன்னைத் தூயவழியண்டி
துன்னியதிரு மன்னுயிரை தன்னுயிரா யெண்ணிக்
கொலை. (வே)

காய்கனிகிழங்கு காய்த்திங்கிருக்க
கருணையிலா துயிருணைப்புசிக்க
வாயில்லா யுயிர்களை வாளாலறுக்க
வாதையினல் வேதனைபட்டேதமுறின் பாதகமே. (வே

புண்ணெனு முண்மையை யெண்ணிடுமானிடர்
புசிப்பரோ நாற்றப்புலாலைப் புகினிடர்
முன்னோருரைத்ததோர் வாக்கியத்தொடர்
மொழிவேனூனை விழைவோர்வயிற் சுடுகாடென
கடையாக்கினர். (வே)

(சரவணபவகுக என்ற மெட்டு)

பெரியார்தினம்புகழும் பெரியபாளையத்தே
பெரியபாளையத்தே பிறந்த பெல்லம்மாளே (பெரி)

திருவடிபணிந்தோம் தீவினை யொழிந்தோம்
தினமுமுயிர்கள்மேலே தீராவன்படைந்தோம் (பெரி)

சிங்கவாகனமேறி செல்வாயருளைக்கூறி
அங்கனமருள்பூண்டு அடைந்தோம் நின்னருள்
கோரி (பெரி)

அம்மாநின்பக்திப்பூண்டு அன்பும் அருளும்
விண்டு
அநியாயமாகவாடு கோழிகளைக்கொல்வாரீண்டு (பெரி)

அம்மா அம்மாவென்றே ஆடுகோழிகள் நின்றே
அலறியழுங்குரலை அம்மாநீ கேளின்றே (பெரி)

ஆடுகோழிகள் வெட்டி ஐயையோ ரத்தங்கொட்டி
ஆலயமுன்னேயாருய்ப் பெருகுதே பாராயெட்டி (பெரி)

ஊமைப் பிராணிகளம்மா ஒருவருங்கேளாரம்மா
ஓடிவந்தாடுகோழி உயிர்களைக் காருமம்மா (பெரி)

கடவுளே குருபரா என்றமெட்டு.

பல்லவி

இறைவியே எல்லம்மா எழிலடிப்பணிந்தோம் வந்தருள்.

சரணங்கள்

குறைகள் முன்னம் பல கோடி யிழைத்தே
கோழி ஆடுபன்றி யாகிப் பூதலத்தே
பிறந்து நின்முன்னாலே வந்ததாபத்தே
பித்தரின் சித்தத்தை நித்தந்திருத்துவாய் (இறை)

அம்மா நின்பூஜைக்கு மாதமோ ஆடி
ஐயோ நாங்களெல்லாம் மடிவது கோடி
சும்மா நீ பார்த்திருப்ப தென்னமோடி
சுந்தரி மைந்தரை சந்ததம் சிந்தைசெய் (இறை)

குட்டிக் குலங்களை விட்டுப்பிரிந்து
குய்யோ முறையோ வென்றலறி விழுந்து
எட்டு திக்குந்துள்ள வெட்டுவதறிந்து
எழுந்துன் குழந்தைகள் தழுவித்தொழுதோம் (இறை)

பூசாரிக் கூட்டங்களுன் பேரில்பாரம்
பூவையரே வைத்துச் செய்கிறார் கோரம்
கூசாமற் கொல்வதைக் கண்டு கொடூரம்
கொண்டு சண்டாளருக் குண்டுபண்ணு தண்டனை (இறை)

சென்னை ஜீவரக்ஷா சங்கத்திற் தொண்டு
செய்யும் பறம்பை ஸ்ரீபாலன் சொல்கொண்டு
உன்னைத் துதித்தோமுயிருடன் கண்டு
உலகினிற் பலியெனுங்கொலையினை விலகச்செய் (இறை)

ராகம் சஹானு—தாளம் ரூபகம்.

முந்தி ஜென்மப்பகையோ எந்த ஜென்மக்குறையோ
இந்த மானிடர்க்கையில் இம்சைக்காளாகினேமே (முந்)

ஆடு கோழியானாலும் கேடு ஒருவர்க்கெண்ணோம்
காடுமேடில் வளர்ந்தும் கருமம் விடவில்லையே (முந்)

அம்மன் பலிக்கென்று யெம்மை மிகவே கொன்று
கொம்மைகொட்டி யெங்கள் குலத்தை யழிக்கின்றவர் (முந்)

கரும்பு யிருக்கமேலே கரம்பை மேய்க்கடாப்போலே
விரம்பக் காய்கனியிருக்கெம் தினத்தை விரும்பி
தின்பார் (முந்தி)

தங்களுடல்புண் கண்டு சங்கை கொள்மாந்தரீண்டு
எங்களுடலூன்மென்று எப்பம் விட்டுண்பவர் (முந்தி)

ஸ்ரீமான் S. R. ராமசாமி முதலியார் இயற்றியது.
(வேலனே இந்த வினையை என் படைத்தாய்—என்ற வர்ணமெட்டு)

பல்லவி

தெய்வமே இந்த தீவினை அகற்றிடுவாய்—இங்கு

அனுபல்லவி

ஜெகதீதிலே, கொலைபாதகம், தொழிலாகவே,
செய்கின்றனர்—தெய்வமே

சரணம்

1. இப்புவி தன்னிலே, இரக்கமிலாமலே
ஏழை உயிர்களை, இம்சிக்கின்றார்களே
ஒப்புமோ தெய்வம் உலகத்தி லுள்ளோரும்
உணராமலே, கொலை பாதகம், துணையாகவே செய்
[கின்றனர் (தெய்)

2 வைசூரி காலரா, வாந்திபேதி பிளேக்கு
வந்து விட்டாலது, அம்மன் குற்றமென்பார்
சுத்தபிசகான வார்த்தைகள் பேசியே
சுளுவாகவே, கொலைகள் பல, விதமாகவே புரிகின்ற
[னர் (தெய்)

3. ஆடு கோழிகளை, அறுக்கும் போததன்
அபயக்குரலோசை, அம்மனும் கேட்கிறாள்
அம்மனின் கோபத்திற் காளாகி நிற்கின்றார்
ஐயோயிவர், அநியாயமாய் நரகில்விழத் துணிகின்ற
[னர் (தெய்)

## எப்போ இப்படுகொலை நிற்கும்

(அப்பா மலைப்பழனி வாசா—என்ற வர்ணமெட்டு)

1. எப்போ இப்படுகொலை நிற்கும்—இந்தப்
பாரினில் உயிர்கள் பிழைக்கும்
அப்பா கொலைகள் இனிமேலே—நீ
அவனியில் செய்ய லாகாதே (எப்போ)

2. அற்பப் பிராணிக ளாகும்—அந்த
ஆடு கோழிகள் தானும்
அன்பாய் நம்முடனே கூடி—அது
அண்டியிருக்கும் நம்மை நாடி (எப்போ)

3. பெண்டு பிள்ளைபிணி கொண்டால்—நாம்
பிரார்த்தனைகள் செய்துக் கொண்டால்
கண்டபடியே ஆடு கோழி—நாம்
காவு கொடுப்பதாகக் கூறி (எப்போ)

4. மந்திரக்கார னொருபாவி—நம்மை
மயக்கிடவந்து மிகக் கூவி
தந்திரமாக சூது பேசி—கோழி
தரவேணு மென்றிடுவான் தோஷி (எப்போ)

5. ஆவேசம் வந்தவர் போலாடி—அம்மன்
ஆடுகேட்கு தென்பார் கூடி
சும்மா இருப்பவரைத் தாவி—அவர்மேல்
தோஷ மிருப்பதாகக் கூவி (எப்போ)

6. பூசாரி செய்வதெல்லாம் மோசம்—அது
புலப்படாது நம் தேசம்
நன்மை அடைய வேண்டுமாகில்—ஜீவ
ரட்சகராய் இருப்பீரே (எப்போ)

7. பெற்றபிள்ளைகளைத் தாயும்—தினம்
பிரியமுடன் சொல்லுவாளோ
இஷ்டமுடனே செய்யும் பூசை—தனை
இழப்பீர் ஜீவ இம்சை (எப்போ)

# ஸ்ரீமான் வெங்கடராம ரெட்டியார் அவர்கள் பாடியது.

## கொலை மறுத்தல்.

### 8. இராகம் தன்யாசி—ஆதிதாளம்.

உத்தமரே உண்மைக்கடவுள் உயிர்கள்தான்
உயிர் பலியிடாதீர் அன்பீர் உயிர் பலியிடாதீர் (உ)

சத்தியமாய் தேவன் ஜீவனென்று லதின்
சிரமதைத் துண்டித்துச் செய்திடல் பூஜையோ (உ)

இத்தரை வுயிர்க்கெலாம் இயம்பொணு மேலான
முத்திபெரும் அறிவினை மெத்தவும்பெற்ற அன்பீர்
ஒத்துழைப்பதே நம் உயர்தவ மாகிடும்
அத்திற மின்றியே அதுகளைக் கொன்றிட்டு
கொத்திகூ றிட்டுமே மெத்த மகிழ்வுடன்
செத்தபின் எத்தேவர்க்கோ செய்வது பூஜை (உ)

நம்ப கள் வுடல்கட்கு நலிவுகள் தோன்றிடின்
எம்மக்கள் தலைகட்கு எமனேலை தீட்டிடல்
நம்மக்கள் போலன்றோ நமையென் செய்தது
வெம்மை மனத்தாலோ வேருயிர் பலியிடல்
எம்மாறும் வேண்டாது கைம்மாறு செய்வதை
அம்மா அம்மா வென்றலற ஆண்டவனுக் கறுக்கிறீர் (உ)

ஆடுகோழி பன்றிகள் அலறஅலற வெட்டல்
கோடிகோடி தரமும் கொலைகள் சூழ்ந்திடுமே
வீடு வசதிகள் வெகுசிலை யுள்ளோர்கள்
காடு மேடுகளில் கதியின்றி மேய்வதை
நாடி கடவுட் கென்றே வோடி யதையறுத்தல்
கேடுகேடு கைவிடீர் கேட்வுள் அதுகளே (உ)

எங்குள வுயிர்களும் இறைவனே யாதலால்
அங்கங் கதனிடத்தும் அன்பே பெருக்குவோம்
மங்களமா யனைத்தும் மானிலத்தின் புற
வெங்கட ராமனும் வேண்டுகிறே னுமை
பொங்கமாய் புகன்றமே எங்குமே யிதனையே
இங்கித மாயினி தங்கிடீர் அன்பீர் (உ)

வேறு சில அறிஞர்களால் இயற்றியது.

## கொலைத் தொழிலும் மாமிசமும் ஒழித்த 'பறையன்' கூறுவது.

ஆண்டிப்பண்டாரம் என்ற மெட்டு.)

வேண்டாம் வேண்டாம் விடுவீர்
வேதனை செய்யும் தொழில்கள் (வேண்டாம்)

சரணங்கள்.

மாண்டால் வருமோ இம்
மானிடதேக மீண்டு
ஆண்டானுரைத்தபடி
ஆடு கோழியை வதைக்க (வேண்டாம்)

தின்றவன் வாயதனைத்
தின்னுதவன் மோந்தால்
நன்றாய்ப் பிணத்தின் நாற்றம்
நாறிடும் அதனல் என்றும் (வேண்)

ஆட்டுக்கறியதனை
ஆவலாய்வாங்கி யுண்போன்
காட்டினில் வாழும் கரடி
பேய் புலியாய்ப் பிறப்பான் (வேண்)

பள்ளர் பறையர்களில்
பாபமென்றேபல பேர்
தள்ளிவிட்டார் இதை நீர்
தயையின்றிப் புசிக்கலாமோ ? (வேண்)

## அம்மன் சந்நதியில் ஆடு கோழிகள் முறையிடுதல்.

("பத்தினிக் கர்னகையே" என்ற மெட்டு)

### பல்லவி.

அபயம் அபயமம்மா—எங்கள்
அம்பிகை மாரி, தாயே
சமய மிது எங்களைக்—காக்க்
தட்சணமே வருவாய் (அபயம்)

ஆடுகளாய்ப் பிறந்தோம்—காடு
மேடுகளில் வளர்ந்தோம்
வேடரைப்போன்ற தீயர் எம்மை
வீணாய் மடிக்கின்றனர் (அபயம்)

உந்தன் பேரைச் சொல்லியே—எங்கள்
உயிரை மடிப்பதனால்
நிந்தனை உந்தனுக்கே வந்து
நேருமடி உமையே— (அபயம்)

கேள்வி முறையில்லையோ—நெஞ்சில்
கிருபை யென்பதில்லையோ
மாள்கின்றோம் பல கோடி மனிதர்
மனம்தான் என்ன கல்லோ— (அபயம்)

எங்கள் தலையினிலே—பிரமன்
இவ்வா றெழுதினனே?
அங்கமுருகுதடி—எங்கள்
அம்பிகை மாரி, தாயே (அபயம்)

பாவி மனிதரெல்லாம்—எம்மைத்
தாவிப் பிடித்து வந்து
ஆவி துடிக்கக் கொன்று—தங்கள்
நாவு ருசிக்கத் தின்பார் (அபயம்)

மக்கள் மனைவியர்க்கோ—பெரும்
துக்கம் நோக்காடு வந்தால்
திக்கற்ற எங்களையே—பலி
அக்ரமமாய்த் தருவார் (அபயம்)

பொங்கல் பழமில்லையோ—நல்ல
பூவுந் தேங்காய் இல்லையோ
சங்கரி உந்தனுக்கு—அவைகள்
சம்மத மாகலையோ?— (அபயம்)

நல்ல புத்தி தருவாய்—அம்மா
நாட்டுள்ள மனிதருக்கே
நரகத்தில் விழாமல்—அவர்களை
நல்வழி கொண்டுவாராய் (அபயம்)

The Rampaul Press, Washermenpet Madras.

# எமது புத்தகங்கள்.

| | | | |
|---|---|---|---|
| அம்மன் பூஜை ... ... ... | 0 | 0 | 6 |
| ஜீவகாருண்ய திறவுகோல் ... ... | 0 | 0 | 3 |
| மனிதனுடைய உணவு ... ... | 0 | 0 | 3 |
| உயிர் வகைகள் ... ... ... | 0 | 0 | 3 |
| கொல்லாமை, புலான் மறுத்தல், கள்ளுண்ணாமை ... ... ... | 0 | 0 | 6 |
| அஹிம்ஸை ... ... ... | 0 | 0 | 6 |
| மதிபெற்ற சிந்து ... ... | 0 | 0 | 3 |
| பொன்னுலக நாதனின் பூவுலகத் தொண்டர்கள் ... ... ... | 0 | 0 | 6 |
| Cow-Protection in India ... | 2 | 0 | 0 |
| What is Humanitarianism? ... | 0 | 1 | 0 |
| The Philosophic Basis of Vegetarianism ... ... ... | 0 | 1 | 0 |
| The Blessings of Vegetarian Diet... | 0 | 1 | 0 |

உயிர்ப்பலியை நிறுத்தப் பிரசாரஞ் செய்யும் அன்பர்களுக்குத் துண்டுப் பிரசுரங்களும் சுவரொட்டிகளும் இனாமாக அளிக்கப்படும்.

தென்னிந்திய ஜீவரக்ஷா பிரசாரக சபை,
436, தங்கசாலைத் தெரு,
சென்னை.